மாணிக்கவாசகப் பெருமான் அருளிய

# 'திருப்பொன்னூசல்'

—பொருளுரை



பார்வதி இராமச்சந்திரன்

# மாணிக்கவாசகப் பெருமான் அருளிய 'திருப்பொன்னூசல்'— பொருளுரை

ஆசிரியர் பார்வதி இராமச்சந்திரன். *tsparu2001@gmail.com*

மின்னூல் வெளியீடு : *http://FreeTamilEbooks.com*


அட்டைப்படம் – லெனின் குருசாமி – *guruleninn@gmail.com*

## *மாணிக்கவாசகப் பெருமான் அருளிய 'திருப்பொன்னூசல்'— பொருளுரை.*

***<u>நூல் பெயர்:</u>***... *மாணிக்கவாசகப் பெருமான் அருளிய 'திருப்பொன்னூசல்'....பொருளுரை.*

***<u>அறிமுக உரை...</u>***

*'திருப்பொன்னூசல்' பாடல்களுக்கு ,தெரிந்த அளவில் பொருளெழுத வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது.. எம்மால் ஆவது யாதொன்றும் இல்லை என்பது சர்வ நிச்சயம்.. அரனருளாலேயே இந்த எண்ணம் தோன்றியதென்பதால் அவனருளாலேயே இது நிகழ வேண்டும்.. எம்பெருமான் எம் உள்ளத்தமர்ந்து, இவ்வரிய செயலை நிறைவேற்றித் தர மனமுருகி வேண்டி, இவ்வரிய செயலைத் தொடங்க முற்படுகின்றேன்..*

*இதைப் படிக்கும் அன்பர்கள், இதில் நான் செய்திருக்கும் தவறுகளைச் சுட்டி, திருத்துமாறு கோருகிறேன்..*

*மதுரை, அருள்மிகு ஸ்ரீ மீனாட்சி அம்மை உடனுறை சுந்தரேஸ்வர ஸ்வாமி திருவடியிணைகளுக்கு இதை பக்தியுடன் சமர்ப்பிக்கிறேன்.*

*இந்த நூலை மின்னூலாக்கம் செய்து உதவிய திரு. ஸ்ரீநிவாசன் அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியும் வணக்கமும்.*

*நூல் குறித்த கருத்துக்களைத் தெரிவிக்க.. tsparu2001@gmail.com*

## திருப்பொன்னூசல் - அருட் சுத்தி.

மாணிக்கவாசகப் பெருமான் தில்லையில் அருளியது.

ஒப்புமை பற்றி வந்த ஆறடித்தரவு கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

*பாடல் # 1*

சீரார் பவளங்கால் முத்தம் கயிறாக
ஏராரும் பொற்பலகை ஏறி இனிதமர்ந்து
நாரா யணன் அறியா நாண்மலர்த்தாள் நாயடியேற்
கூராகத் தந்தருளும் உத்தர கோசமங்கை
ஆரா அமுதின் அருள்தா ளிணைபாடிப்
போரார்வேற் கண்மடவீர் பொன்னூச லாடாமோ.

<u>பொருள்:</u>

போர் செய்ய உதவும் வேலையொத்த விழிகளை உடைய பெண்களே!.. சீர் பொருந்திய, மேன்மை மிக்க பவளத்தால் ஆன கால்களையும், முத்து வடங்களை கயிறாகவும் கொண்ட (ஊஞ்சலில்), அழகு பொருந்திய, பொன்னால் ஆன ஊஞ்சல் பலகையில் ஏறி, இனிதாய் அமர்ந்து, நாரணனாகிய திருமால் தேடிக் கண்டடைய முடியாத, அன்றலர்ந்த மலர் போன்ற திருவடிகளை, நாயினை ஒத்த அடியேனுக்கு உறைவிடமாகத் தந்தருளிய, திரு உத்தரகோசமங்கையில் எழுந்தருளியிருக்கும், தெவிட்டாத இன்னமுதைப் போன்றவனது திருவடிகளைப் பாடி, நாம் பொன்னூஞ்சலாடுவோம்..!..

<u>சற்று விரிவாக..</u>

முதலில் 'அருட்சுத்தி' என்றால் என்ன என்பதைப் பற்றிப் பார்க்கலாம்.. அருட்சுத்தியாவது, இறையருளால் உயிர்கள் அடைகின்ற தூய்மை... பசு, பதி, பாசம் இம்மூன்றினுள், பசுவாகிய உயிரைப் பிணித்திருக்கும் தளையாகிய பாசம், பதியாக இறைவனது கருணையாலேயே நீங்கும்.

*( மயக்கிய ஐம்புலப் பாசம் அறுத்துத்
துயக்குஅறுத் தானைத் தொடர்மின் தொடர்ந்தால்
தியக்கம்செய் யாதே சிவன்எம் பெருமான்
உயப்போ எனமனம் ஒன்றுவித் தானே.(திருமூலர், திருமந்திரம்) ).*

*(<u>பொருள் சுருக்கமாக</u>.. தம் அடியார்களுடைய ஐம்புல ஆசையாகிய பாசங்களை நீக்கி, அவர்களது கலக்கத்தை போக்கி அருள்கின்றவன் சிவன். ஆதலால், அவனை விடாது பற்றித் தொடருங்கள். தொடர்ந்தால், அவன் சற்றும் காலம் தாழ்த்தாது, திருவுளம் உகந்து, நீங்கள் உய்யுமாறு உங்களுடைய மனங்களை ஒருமுகப்படுத்துவான்).*

*ஆகவே, இறைவனை எப்போதும் நாடி, அவனது அருள் மழையில் தோய்ந்து வாழ்ந்தோமாயின், பாசம் நீங்குதல் கைகூடும்.. இறைவனது திருவடிப் பேறு கிட்டும்.*

*பொதுவாக, ஊஞ்சல், மனித வாழ்விற்கு சமமானதாகக் கருதப்படுகின்றது.. உயர்வு தாழ்வு, நன்மை தீமை என இருமைகள் அனைத்தும் மானிடரின் வாழ்வில் சகஜம்.. அனுதினமும் இவற்றைச் சந்தித்தே வாழ வேண்டியுள்ளது.. ஆயினும், ஊஞ்சலின் பலகையும் கயிறுகளும் அசைந்தாலும், ஊஞ்சலின் கால்கள் அசைவதில்லை.. அவை, நிலத்தில் பலமாக ஊன்றி நிற்கின்றன. அது போல், வாழ்வின் ஏற்ற இறக்கங்களிலும், மேடு பள்ளங்களிலும், மனதை பலமாக இறைவனது திருவடிகளில் ஊன்றி நிற்க, இருமைகளால் மனம் பாதிக்கப்படாது... வாழ்வே ஒரு விளையாடல் போல் காணும்..*

*வாதவூரார், பொன்னூசல் பாடியது, இவ்வுண்மையை நாம் உணரும் பொருட்டே.. மேலும், எச்செயலைச் செய்யினும் அது ஈசனுக்கு அர்ப்பணமாகச் செய்தல் வேண்டும் என்னும் உயரிய கருத்தையும் வலியுறுத்தும் பொருட்டேயாம்.. ஊசலில் ஆடும் போதும், ஆடல் வல்லான் பாதம் சிந்தையுள் வைத்தால் சிறப்போம் என்பதும் கருத்து.*

*பவளம் காலாக, முத்து வடம் கயிறாக என்றெல்லாம் கூறியது ஊசலாடும் மகளிரின் செல்வச் சிறப்பை உரைப்பதற்காக.. அத்தகைய செல்வச் சூழலில் இருந்தும், இவையெல்லாம் நிலையற்றவை என்று உணர்ந்து, நிலையான, இறைவனின் திருவடிப்பேற்றை அடையும் பொருட்டு, அதைப் புகழ்ந்து பாடியவாறே ஊஞ்சலாடுவதாக உரைத்தார்.*

*'நாரணனும் காணா' என்றது, இறைவனது திருவடிகள் அடைதற்கு அரியன என்பதை உணர்த்த. 'நாயடியேன்' என்றது, மும்மலங்களால் பிணிக்கபட்ட உயிரின் கீழ்மை நிலையை உணர்த்த.. அந்நிலையில் இருப்பினும், இறைவனது திருவடிகளைப் போற்றினால், இறையருள் கிட்டும்.. அதன் மூலம் பிறவா பெருநிலை அடையலாம் என்பதை உணர்த்தவே, 'உத்தர கோசமங்கை ஆரா அமுதின் அருள்தா ளிணைபாடி' என்றார்.. இறைவனை 'ஆரா அமுது' என்றது, இறைவன் பிறவா நிலை தரும் தெவிட்டாத அமுதினைப் போன்றவன் என்பதையும், இறைவன், தன் கருணையால் உயிர்கட்கு பிறவா நிலை தரவல்லவன் என்பதையும் ஒரு சேர உணர்த்தியது.*

*இவ்வாறு இறைவன் தாளிணைகளைப் போற்றிப் பாட, இறைவனது திருவடி, உயிர்கட்கு உறைவிடமாக அமையும். திருவடிப் பேறு கிட்டும் என்றருளினார்.*

*மாணிக்கவாசகப் பெருமான் மலரடிகள் போற்றி!.*

*பாடல்: 2*

*மூன்றங் கிலங்கு நயனத்தன் மூவாத*
*வான்றங்கு தேவர்களுங் காணா மலரடிகள்*
*தேன்றங்கித் தித்தித் தமுதூறித் தான்தெளிந்தங்*
*கூன்றங்கி நின்றுருக்கும் உத்தர கோசமங்கைக்*
*கோன்றங் கிடைமருது பாடிக் குலமஞ்ஞை*
*போன்றங் கனநடையீர் பொன்னூச லாடாமோ.*

<u>*பொருள்:*</u>

*மயில் போன்ற சாயலும், அன்னம் போன்ற நடையழகும் உடைய பெண்களே!....மூன்று விழிகளை உடையவனும், கெடுதல் என்பது இல்லாத , விண்ணுலகில் தங்கி வாழும் தேவர்களும் காண்பதற்கு அரிய, ( இறைவனது ) மலரடிகள், தேன் போலும் இனிமை பொருந்தி, அமுதமாக ஊறி, தெளிந்து விளங்கி, அது ( நம் ) உடம்பினில் தங்கி நின்று உருக்குமாறு அருளும், திருஉத்தரகோசமங்கைக்குத் தலைவனும் ஆகிய இறைவன் தங்கியருளும் திருவிடைமருதூரைப் பாடி, நாம் பொன்னூஞ்சலில் ஆடுவோமாக!.*

<u>*சற்று விரிவாக:*</u>

*பெண்களின் தோற்றத்துக்கு உவமையாக மயிலையும், நடையழகுக்கு உவமையாக அன்னத்தின் நடையழகையும் கூறுவது கவி மரபு. அது பற்றியே 'குலமஞ்ஞைபோன்றங் கனநடையீர்' என்றார். 'குலமஞ்ஞை' என்பது உயர்ந்த, சிறப்பு பொருந்திய மயில்' என்று பொருள்படும். இதை மகளிரின் குணச்சிறப்புக்கும் பொருத்திப் பொருள் கொள்ளலாம்.*

*'மூன்றங் கிலங்கு நயனத்தன்' என்பதை, 'அங்கு இலங்கு மூன்றாகிய நயனத்தன்' என்று மாற்றிப் பொருள் கொள்ள வேண்டும்.. 'மூன்று' என்பது, சந்திரன், சூரியன், அக்னி ஆகிய மூன்று சுடர்களைக் குறிக்கும்... எம்பெருமானது வலது கண் சூரியன், இடது கண் சந்திரன், நெற்றிக்கண் அக்னி*

*'அங்கு' என்பது ஆகாயத்தைக் குறிக்கும். அக்னி, நிலத்தில் உள்ளதாயினும், சந்திரனும், சூரியனும் ஆகாயத்தில் இலங்குவதால், மூன்றனையுமே 'அங்கு'*

*என்ற சொல்லால் குறித்தார். 'வானில் இலங்கும் மூன்று சுடர்களை விழிகளாக உடையவன்' என்பது பொருள்.*

*'மூவா' என்பது 'கெடாத' என்ற பொருளில் வரும்.. இதனை 'மூவாத திருவடிகள்' என்று பொருள் கொள்ள வேண்டும்.. மூவா என்பது விண்ணுலகினைக் குறிப்பதல்ல.. பிரளய காலத்தில் அண்ட சராசரமும் ஐயனுள் ஒடுங்கும் ஆதலால், 'மூவா' என்பது இறைவனது திருவடிகளின் தன்மையையே குறிக்கும்.*

*தேவர்கள், மனிதர்களைக் காட்டிலும் உயர்நிலையை அடைந்த உயிர்கள். அவர்களும் காண்பதற்கு அரியவை எம்பெருமானது திருவடிகள்.. ஐயன் திருவுளம் உகந்தால், கர்மவினைகள் நீங்கி, உயிர்களுக்கு திருவடிப்பேறு கிட்டும்.. ஆக, தேவராயினும், மனிதராயினும், இறைவனது கருணை ஒன்றே அவர்தம் பிறவிப்பெருங்கடலை நீக்கியருள வல்லது. உயிர்களின் பாசத்தை நீக்கி, 'அருட்சுத்தி' தர வல்லது.. அதைக் குறிக்கும் பொருட்டே 'வான்றங்கு தேவர்களுங் காணா மலரடிகள்' என்றார்.*

*எம்பெருமானை எப்போதும் எண்ணித் துதிக்கின்ற அடியவர்களுக்கு, அவர்தம் திருவடிகள் தேனாகத் தித்தித்து, அமுதாக ஊறித் தெளிந்து விளங்குமென்றார்.. தித்திக்கும் பொருட்கள் எத்தனையோ இருக்க, குறிப்பாக 'தேன்' என்று கூறியது அதன் கெடாத தன்மை குறித்தும், தேனை இறைவனுக்கு அர்ப்பணம் செய்யும் நோக்கம் குறித்துமாகும்.. இறைவனது திருவடிகள் 'மூவாத திருவடிகள்' என்பதால், தேனாகத் தித்தித்து என்றார்.. மேலும், எவ்வாறு தேனீக்கள், தாம் முனைந்து, மலர் தோறும் சென்று சேகரித்த தேனை, 'நான், எனது' என்னும் எண்ணம் சிறிதும் இன்றி, நமக்குத் தருகின்றனவோ, அவ்வாறு 'நான், எனது' என்னும் எண்ணம் நீங்கி, முழுவதும் இறைவனையே சார்ந்திருக்கும் நிலையடையும் பொருட்டே நாம் இறைவனுக்குத் தேனால் அபிஷேகம் செய்கின்றோம்.. அவ்வாறு, இறைவனைச் சார்ந்திருக்கும் உயிர்களை இறைவனும் உய்விப்பான் அதாவது பிறவா பெருநிலையை அடையச் செய்வான் என்பதையே பிறவா நிலையளிக்கும் 'அமுதாக ஊறி' என்றார்.*

*தேனும் அமுதும் பேரானந்த நிலையைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.*

*திருவடிகள், அவ்வாறு தெளிந்து விளங்குவதோடு ஊனினையும் நின்று உருக்கியது என்றார்.*

*இறைவனால் ஆட்கொள்ளப்படும் நிலையில், முதலில் உடல் புளகாங்கிதம் அடைவது முதலான மாற்றங்கள், அன்பு மேலீட்டால் தோன்றும்...அதன் பின்னரே, உள்ளத்தில் ஞான ஒளி தோன்றி, இறை அனுபவம் உண்டாகும்.. இறைவனது சிறப்புப் பொருந்திய திருவடிகள், தமக்கு அத்தகைய நிலையை அளித்தன என்றார். இந்தக் கருத்தையே,*

*ஆனையாய்க் கீடமாய் மானுடராய்த் தேவராய்*
*ஏனையப் பிறவாய்ப் பிறந்திறந் தெய்த்தேனை*
*ஊனையும் நின்றுருக்கி என்வினையை ஒட்டுகந்து*
*தேனையும் பாலையுங் கன்னலையும் ஒத்தினிய*
*கோனவன்போல் வந்தென்னைத் தன்தொழும்பிற் கொண்டருளும்*
*வானவன் பூங்கழலே பாடுதுங்காண் அம்மானாய். (திருஅம்மானை).*

*என்றும் அருளினார்..முன்வினையின் விளைவாகவே இப்பிறவி அமைந்ததாதலால், ஊன் உருகுதல், வினைப்பயன் விலகுதலையும் குறிக்கும்..*

*இவ்விதம் தம்மை ஆட்கொண்ட, திருவுத்தரகோசமங்கையின் தலைவனாகிய இறைவன், எழுந்தருளியிருக்கும் 'திருவிடைமருதூரை'ப் பாடி, நாம் பொன்னூசலாடுவோம் என்றார். திருவிடைமருதூர், மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றாலும் சிறப்புப் பெற்ற திருத்தலமாகும்..இறைவன், அகத்தியர் முனிவர் வேண்டுதலுக்கிணங்க எழுந்தருளியதோடு, தம்மைத் தாமே பூசித்து, தம்மை அர்ச்சிக்கும் முறைகளை அருளிய திருத்தலம் இது.. 'தாமே தம்மைப் பூசித்தது ஏன்?' என்று உமையம்மை வினவ, 'பூசித்ததும், பூசிக்கப்படுவதும் யாமே' என்றருளி, அனைத்தும் தாமே என்பதை உணர்த்தினார்.. எங்கும் இறைவனே நிறைந்திருக்கிறான் என்ற ஞானத்தை உயிர்கள் அடைய வேண்டுவதன் பொருட்டு, 'திருவிடைமருதூரைப்' பாடுவோம் என்றருளினார்..*

*இறைவன் எழுந்தருளிய தலங்களைப் பாடுதலும், இறையருளைப் பெறுவதற்கான மார்க்கங்களில் ஒன்று என்பதும் இதனால் புலப்படுத்தப்பட்டது.*

*மாணிக்கவாசகப் பெருமான் மலரடிகள் போற்றி!.*

*பாடல்: 3.*

*முன்னீறும் ஆதியும் இல்லான் முனிவர்குழாம்*
*பன்னூறு கோடி இமையோர்கள் தாம்நிற்பத்*
*தன்னீ றெனக்கருளித் தன்கருணை வெள்ளத்து*
*மன்னூற மன்னுமணி உத்தர கோசமங்கை*
*மின்னேறு மாட வியன்மா ளிகைபாடிப்*
*பொன்னேறு பூண்முலையீர் பொன்னூச லாடாமோ.*

**பொருள்:**

*"பொன்னாலான அழகிய ஆபரணங்களை அணிந்த தனங்களையுடைய பெண்களே!,..ஆதியும் அந்தமும் இல்லாத இறைவன், பலநூறு கோடி தேவர்களும், முனிவர் கூட்டமும் அவனது அருளுக்காக காத்திருக்கும் போது, தன் திருநீற்றினை எனக்களித்து, தன் கருணை வெள்ளத்திலே, மிகுதியாக யான் ஆழ்ந்திருக்குமாறு அருளிய மணி (மாணிக்கம்) போன்ற எம்பிரான், எழுந்தருளியிருக்கும் அழகிய உத்தரகோசமங்கையில் உள்ள, ஒளி பொருந்திய, உயர்ந்த மாடங்களையுடைய அகன்ற கோயிலைப் பாடி, நாம் பொன்னூசல் ஆடுவோம்!".*

**சற்றே விரிவாக:**

*இறைவன் ஆதியும் அந்தமும் இல்லாதவன். இங்கு 'முன்' என்ற சொல்லின் பயன்பாடு, 'நினைக்கப்படுகின்ற' என்ற பொருளில் வரும். ஆதியும் அந்தமும் இல்லாத இறைவன், தவத்திற் சிறந்த முனிவர்கள் மற்றும் விண்ணோர்கள் நினைவில் எப்போதும் நிறைந்திருக்கின்றான்..இதையே 'முன் ஈறும் ஆதியும் இல்லான் முனிவர்குழாம்' என்றார். அவ்வாறு 'கருத்தால் இறைவனோடு எப்போதும் ஒன்றியிருப்பவர்களையும் காத்திருக்க வைத்து, தம் மீது கொண்ட அளப்பரிய கருணையினால், இறைவன், தம் திருநீற்றினை எனக்கருளினார்!' என்று இறையனாரின் கருணையை வியந்து கூறுகின்றார். 'முன் ஈறும் ஆதியும் இல்லான்' என்பதை, 'ஆதியும் அந்தமும் இல்லாத இறைவனே எப்போதும் நினைக்கத் தகுந்தவன்' என்பதாகவும் பொருள் கொள்ளலாம்.*

*'நீறு அளிப்பது' என்பது ஆட்கொள்ளும் அருட்செயலைக் குறிக்கும்.. திருநீறு, இறைவனது அருளின் வடிவாதலால், 'திருநீறு' என்று குறிக்காது, 'தன்னீறு' என்று அருளினார்.*

*( ஆவா சிறுதொண்ட னென்னினைந் தானென் றரும்பிணிநோய்*
*காவா தொழியிற் கலக்குமுன் மேற்பழி காதல்செய்வார்*
*தேவா திருவடி நீறென்னைப் பூசுசெந் தாமரையின்*
*பூவார் கடந்தையுட் டூங்கானை மாடத்தெம் புண்ணியனே. (அப்பர் பெருமான்).*

*முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு*
*சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு*
*பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு*
*சித்தி தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. (திருஞானசம்பந்தப் பெருமான்) ).*

*இறைவனது கருணை, ஒரு துளி பட்டாலும் போதும், திருவடிப்பேறு நிச்சயம். அவ்வாறிருக்க, இறைவனது கருணை, வெள்ளமாகவே வந்து தம்மை ஆட்கொண்டது என்றார்.. ஆட்கொண்டது மட்டுமல்லாமல், அதிலேயே தம்மை அழுத்தியது என்கிறார்.*

*இதையே 'பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே' என்று சிவபுராணத்திலும் குறிக்கிறார்.*

*மானிடர்களின் வினை மூட்டையானது சுலபத்தில் தீர்வதல்ல. ஆயினும் இறைவன் கருணை, வல்வினைகளை அகற்றி, அருட்சுத்தி தந்து, முத்தி தர வல்லது. பெரும் ஞானிகளும் வேண்டுவது எம்பெருமானது கருணையையே.*

வள்ளலார் பெருமான்,

பணிந்தறியேன் அன்புடனே பாடுதலும் அறியேன்
படித்தறியேன் கேட்டறியேன் பத்தியில் பூ மாலை
அணிந்தறியேன் மனம்உருகக் கண்களின்நீர் பெருக
அழுதறியேன் தொழுதறியேன் அகங்காரம் சிறிதும்
தணிந்தறியேன் தயவறியேன் சத்தியவா சகமும்
தான் அறியேன் உழுந்தடித்த தடியதுபோல் இருந்தேன்
துணிந்தெனக்கும் கருணை செய்த துரையேஎன் உளத்தே
சுத்த நடம் புரிகின்ற சித்தசிகா மணியே

என்று வேண்டுகிறார்..

நாம் அறிந்தும் அறியாமலும் செய்கின்ற தீவினைகள் அனைத்தையும், நம் பால் கொண்ட கருணையால் நீக்கியருள்கிறான் எம்பிரான்.. தீவினைகள், நம்மை வாட்டுகின்ற பெரும் தீயாதலால், தன் கருணையை வெள்ளமாகத் தந்து, அந்தத் தீயை அவிக்கின்றான் அன்பெனும் மாமலை.

அவ்வாறு செய்வதோடு நில்லாமல், தன் கருணை வெள்ளத்திலேயே அழுந்துமாறும் செய்கின்றான் அந்த மாமணி. வெள்ளத்தில் அழுந்தியிருக்கும் பொருளை தீ ஒன்றும் செய்ய இயலாது. அது போல், மீண்டும் தீவினைகள் நம்மைத் தொடாதிருக்கும் திருவருளும் செய்கின்றான். இதுவே கிடைத்தற்கரிய திருவடிப்பேறு!!!..

நடித்து மண்ணிடைப் பொய்யினைப் பலசெய்து
நானென தெனும்மாயக்
கடித்த வாயிலே நின்றுமுன் வினைமிகக்
கழறியே திரிவேனைப்
பிடித்து முன்னின்றப் பெருமறை தேடிய
அரும்பொருள் அடியேனை
அடித்த டித்துவக் காரமுன் தீற்றிய
அற்புதம் அறியேனே.

என்று 'அற்புதப் பத்தி'லும் இதைக் கூறியருள்கிறார் வாதவூரார்.

*இறைவனை 'மணி' என்று வாதவூரார் பல பாடல்களில் துதிப்பதைக் காணலாம்.. இங்கு 'மணி' என்பது 'மாணிக்கம்' என்ற பொருளில் வரும்.. 'மழபாடியுள் மாணிக்கமே' என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளும் ஐயனைப் போற்றுவார்.. மாணிக்கம் செந்நிறமானது. அதன் அருகில் வெண்ணிறப் பளிங்கினை வைத்தாலும், மாணிக்கத்தின் ஒளி பட்டு அதுவும் செந்நிறமாய்த் தோன்றும்.. அது போல், அருட்சுத்தியால் நன்னிலையடைந்த உயிர்கள், இறைவனருளால் சாயுஜ்ய நிலையடையும். இதனைச் சுட்டவே, 'மன்னு மணி' என்றார். 'உத்தரகோசமங்கையுள் மன்னு மணி' என்று பொருள் கொள்ள வேண்டும்.. 'மணி உத்தரகோசமங்கை' என்றும் கொண்டு, 'அழகிய உத்தரகோசமங்கை' என்றும் பொருள் கொள்ளலாம்.*

*உத்தரகோசமங்கையில் எழுந்தருளியிருக்கும் இறைவனது கோயிலானது ஒளி பொருந்திய, மிகவுயர்ந்த மாடங்களை உடைய, அகன்ற திருக்கோயில்.. அத்தகைய அழகிய திருக்கோயிலைப் பாடி, நாம் பொன்னூசல் ஆடுவோம்!' என்பதை,*

*'மின்னேறு மாட வியன்மா ளிகைபாடிப்*

*பொன்னேறு பூண்முலையீர் பொன்னூச லாடாமோ' என்று குறித்தார்.*

*'வியன் மாளிகை' என்பது பெரிய, அகன்ற மாளிகை என்று பொருள்படும்.. 'மின்' என்பது ஒளி என்ற பொருள் தரும். 'மாளிகை' என்பது இறைவன் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலைக் குறித்தது. நம் உடலும் இறைவன் எழுந்தருளியிருக்கும் ஆலயமே!.. 'ஊன் உடம்பு ஆலயம்' என்பார் திருமூலர்.*

*ஒளி பொருந்திய இறைவன் இவ்வுடலினுள் உறைகிறான்..அதை உணர்ந்து, மானிடப் பிறவியின் மகத்துவம் அறிந்து, இவ்வுடலினுள் ஒளியாக உறைபவனே, 'மின்னேறு மாட வியன்மா ளிகை'யுள்ளும் உறைகின்றான் என்னும் ஞானம் பெறுதலின் முதல்படியே அருட்சுத்தி.*

*இறைவன் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில்களைப் பாடுதலும், அவனது கருணையைப் பெறும் மார்க்கங்களில் ஒன்று..ஆலய நிர்மாணத்துக்குரிய ஆகம நெறிகள், யோக மார்க்கத்தை உள்ளடக்கியவை.. ஆகவே,*

*திருக்கோயிலைப் பாடுதல், இறைவனைப் பாடுதலேயாம்.. ஆகவே 'வியன் மாளிகை பாடி' என்றருளினார்.*

*மாணிக்கவாசகப் பெருமான் மலரடிகள் போற்றி!*

*பாடல்: 4*

*நஞ்சமர் கண்டத்தன் அண்டத் தவர்நாதன்*
*மஞ்சுதோய் மாடமணி உத்தர கோசமங்கை*
*அஞ்சொலாய் தன்னோடுங் கூடி அடியவர்கள்*
*நெஞ்சுளே நின்றமுத மூறிக் கருணைசெய்து*
*துஞ்சல் பிறப்பறுப்பான் தூய புகழ்பாடிப்*
*புஞ்சமார் வெள்வளையீர் பொன்னூசல் ஆடாமோ.*

***பொருள்:***

*"தொகுதியாகப் பொருந்திய, வெண்மை நிறமுடைய சங்கினால் ஆன வளையல்களை அணிந்த பெண்களே!....விடம் அமர்ந்த கண்டத்தை உடையவனும், தேவலோகத்தவர்க்குத் தலைவனும், மேகங்கள் படிகின்ற, உயர்ந்த மாடங்களை உடைய, அழகிய உத்தரகோசமங்கையில், இனிய மொழியையுடைய உமாதேவியோடு கூடி, அடியவர்கள் நெஞ்சுள்ளே நிலைத்து நின்று, பேரானந்த அமுதம் சுரந்து, தன் கருணையால், பிறப்பு, இறப்பை அறுப்பவனுமாகிய, இறைவனது தூய புகழைப் பாடி, நாம் பொன்னூஞ்சல் ஆடுவோம்".*

***சற்று விரிவாக:***

*முன் வந்த பாடல்களைப் போலவே, இதிலும் ஈற்றடியையே முதலில் வைத்துப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.. "தொகுதியாகப் பொருந்திய, வெண்மை நிறமுடைய சங்கினால் ஆன வளையல்களை அணிந்த பெண்களே!" என்று பெண்களை விளிக்கிறார் வாதவூரார்.. திருவெம்பாவை உரையில் நாம் முன்பு பார்த்தது போல், 'வளை' என்கிற சொல், உடல் உணர்வை, குறிப்பால் உணர்த்துவதற்காக கையாளப்படுகின்றது. ( இறைவன், அடியார்களது) 'வளை கொள்ளுதல்' என்பது, இறையருளால், அடியார்கள் தங்களது உடல் உணர்வைக் கடந்து நிற்றல் என்னும் பொருள் தரும்.. இதனை பெரியோர் பலரும் தம் பதிகங்களில் கையாண்டிருப்பதைக் காணலாம்..*

*( நீர்ப ரந்தநிமிர் புன்சடை மேலோர் நிலாவெண் மதிசூடி*
*ஏர்ப ரந்தவின வெள்வளை சோரவென் னுள்ளங் கவர்கள்வன்*
*ஊர்ப ரந்தவுல கின்முத லாகிய வோரூ ரிதுவென்னப்*
*பேர்ப ரந்தபிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே (திருஞானசம்பந்தப் பெருமான்).*

*காயோ டுடனாய் கனல்கை ஏந்திக்*
*காடே இடமாக் கணங்கொண்ட*
*பேயோ டாடிப் பலிதேர் தரும்ஓர்*
*பித்தப் பெருமான் திருமகனார்*
*தாயோ டுறமும் தணிகா சலனார்*
*தகைசேர் மயிலார் தனிவேலார்*
*வேயோ டுறழ்தோள் பாவையர் முன்என்*
*வெள்வளை கொண்டார் வினவாமே. (திருஅருட்பா) )..*

*வெள்வளை, அதை அணிந்துள்ள பெண்களது உயர்ந்த குணநலன்களைக் குறிக்கிறது எனலாம். மேலும் சத்வ குணத்தையும் அது குறிக்கிறது. தொகுதியாக அதை அணிந்து ஆடுதல் என்னும் செயலால், பெண்கள் இன்னமும் உடல் உணர்வைக் கடந்து பரமனுள் ஒன்றவில்லை என்பதைக் குறிப்பால் உணர்த்தினார். அந்த உயர் நிலை வேண்டியே பரமனைப் புகழ்ந்து பாடுகின்றார்கள் என்றும் கொள்ளலாம்.*

*'நஞ்சமர் கண்டத்தன்' ======== நஞ்சை அருந்தியதால், கறுத்த கழுத்தினை உடையவன் எம்பிரான். இங்கு 'அமர்' என்ற பதத்தால், நஞ்சு எம்பெருமானால் விரும்பி அருந்தப்பட்டது என்பதை உணர்த்தினார்.. நஞ்சினை, விரும்பி அருந்தி, தம் கண்டத்தில் அம்மையின் மூலம் அமர்த்தினார் நீலகண்டர்.*

*அண்டத்தவர்.========== .மேலுலகத்தவர்.. தேவர்கள்.. அவர்களுக்கெல்லாம் தலைவன் எம்பிரான்.. அவனே, மேகங்கள் தொடும் மாடங்களை உடைய, அழகிய உத்தரகோசமங்கையில் உமையொடு கூடி, எழுந்தருளியிருக்கின்றான் என்கிறார்.. 'விண்ணோர்களின் தலைவன்' என்று எம்பிரானைக் குறித்தவர், 'விண்ணில் உலாவும் மேகங்கள் படியும் மாடங்கள் கொண்ட திருக்கோயில்' என்று குறித்ததன் மூலம், ' இறைவன், விண்ணோர்களுக்கும் தலைவன், மண்ணுலகத்தோரும் தன்னை எளிதில் தொழும் வண்ணம், விண்ணை அளாவிய மாடங்கள் அமைந்த*

*திருவுத்தரகோசமங்கைத் திருக்கோயிலில் உமாதேவியுடன் எழுந்தருளியிருக்கிறான்' என்றருளினார். .*

*உத்தரகோசமங்கையில், வாதவூராருக்கு, உமாதேவியாருடன், அம்மையப்பனாகக் காட்சி தந்தருளியதையே 'அம்சொலாள் தன்னொடுங் கூடி' என்றார். இதில் இறைவியின் மொழி இனிமையும் குறிக்கப்பெற்றது..*

*"பாலையும் தேனையும் பாகையும் போலும் பணிமொழியே" என்று அபிராமி பட்டரும் இறைவியைப் போற்றுவதை நினைவு கூரலாம்..*

*அவ்வாறு இறைவன் அம்மையப்பனாக எழுந்தருளியது மட்டுமல்லாது, அமுதம் போன்ற பேரானந்த நிலை தந்தருளியதோடு, தன் பெருங்கருணையால், பிறப்பு, இறப்பாகிய சுழலை அறுத்தருள் செய்தார் என்கிறார். இங்கு 'தமக்கு' எனக் குறிக்காது, 'அடியவர்கள்' என்று குறித்ததன் மூலம், தம்மை அடியவருள் ஒருவனாக இறைவன் இருத்தியதைச் சொன்னதோடு, மெய்யடியார்களுக்கு அருள் செய்யும் பான்மையில், தமக்கும் அமுதூறி, கருணையால் அருள் செய்தான் இறைவன் என்பதைக் குறிப்பால் உணர்த்தினார்.*

*'அஞ்சொலாள் தன்னோடுங் கூடி அடியவர்கள் நெஞ்சுளே நின்றமுதம்' என்ற வரிகள், இறைவன், உமாதேவியோடு கூடி , நெஞ்சில் நிலைத்த அருட்காட்சி தந்ததைக் குறிப்பதோடு அல்லாமல், 'நெஞ்சுளே நின்றமுதம்' என்று தனியாகப் பிரிக்குங்கால், இறைஅனுபவம் பெற்ற தன்மையைச் சுட்டுவதாகவும் கொள்ளலாம்.*

*இறைவனது புகழே குறைவில்லாதது.. ஆதலின் அதைத் 'தூயபுகழ்' என்றார்..*

*இவ்விதம், இறைவனது புகழைப் பாட, அம்மையப்பனது அருட்காட்சி கிட்டும், இவ்வுடல் உணர்வழிந்து, பேரானந்த நிலையை எய்தலாம் என்று, ஊஞ்சலாடும் மகளிர் பாடி ஆடுவதாக உரைத்தார்.*

*மாணிக்கவாசகப் பெருமான் மலரடிகள் போற்றி!.*

*பாடல்: 5.*

*ஆணோ அலியோ அரிவையோ என்றிருவர்*
*காணக் கடவுள் கருணையினால் தேவர்குழாம்*
*நாணாமே உய்யஆட் கொண்டருளி நஞ்சுதனை*
*ஊணாக உண்டருளும் உத்தர கோசமங்கைக்*
*கோணார் பிறைச்சென்னிக் கூத்தன் குணம்பரவிப்*
*பூணார் வனமுலையீர் பொன்னூசல் ஆடாமோ.*

**பொருள்:**

*"அழகிய தனங்களையுடைய பெண்களே!!.. 'இறைவன், ஆணோ, பெண்ணோ, அலியோ..' என்று அறிவதற்காக, அயனும் மாலும் தேடியும் கண்டடைய முடியாத கடவுளாகிய எம்பிரான், தன் தனிப்பெருங்கருணையால், தேவர் கூட்டம் தோற்று அழியாதபடிக்கு அவர்களை ஆட்கொண்டருளி, பாற்கடலில் தோன்றிய ஆலகால விடத்தினை உணவாகக் கொண்டருளினான். அவ்விதம் அருளியவனும், வளைந்த பிறையை தன் சடைமுடி மேல் தரித்த, உத்தரகோசமங்கையிலுள்ள கூத்தனுமாகிய இறைவனது குணத்தைத் துதித்து, நாம் பொன்னாலாகிய ஊஞ்சலில் இருந்து ஆடுவோமாக".*

**சற்றே விரிவாக:**

*ஒரு சமயம், ஐயன், அயனும் மாலும் தம்மைத் தேடிக் கண்டடையும் பொருட்டு, திருவண்ணாமலையில், சோதி வடிவாக நின்றருளினான்.. இதனையே 'ஆணோ அலியோ அரிவையோ என்றிருவர் காணக் கடவுள் ' என்றார்.. சோதி வடிவினனான இறைவன், ஆண், பெண், அலி முதலிய வேற்றுமைகளைக் கடந்த அருவுருவானவன்..இருவர் என்றது அயனையும் மாலையும்.. 'அவர்களாலேயே காண இயலாதவன்' என்று சொன்னதன் மூலம் இறைவன் காட்சிக்கு அரியன் என்பது புலனாயிற்று...*

*திருவுளம் உகந்து, பாற்கடலில் தோன்றிய நஞ்சை அருந்தியது, ஐயனது அறக்கருணைக்குச் சான்றாகச் சொல்லப்படுகின்றது.. பாற்கடலில் ஆலகால விடம் தோன்றியதும், அஞ்சி ஓடிய தேவர்கள், தோற்று அழியாதவாறு, தன்*

தனிப்பெருங்கருணையால் அவர்களை ஆட்கொண்டு, நஞ்சை உணவாகக் கொண்டான் எம்பிரான். இதையே,

"பேராசை யாமிந்தப் பிண்டமறப் பெருந்துறையான்
சீரார் திருவடி யென்தலைமேல் வைத்தபிரான்
காரார் கடல்நஞ்சை உண்டுகந்த காபாலி
போரார் புரம்பாடிப் பூவல்லி கொய்யாமோ"
என்று, திருப்பூவல்லியிலும் போற்றுகின்றார் வாதவூரார்.

இங்கு 'நாணாமே' என்றது 'விடத்தினால் தோற்று அழியாதிருக்கும்படியாக ' என்னும் பொருளில் சொல்லப்பட்டது..விடத்திற்கு அஞ்சி ஓடி வந்த தேவர்களை இகழாது, தம் பெருங்கருணையால் அவர்களுக்கு அபயம் அளித்து, ஆலகால விடத்தைத் தாமே உவந்து ஏற்றார்.. ஆதலின், இப்பொருள் கூறப்பட்டது.

அறக்கருணையால், அவ்விதம் அருளிய எம்பிரானே திருவுத்தரகோசமங்கையுள், பிறைமதி சூடி எழுந்தருளியிருக்கிறார் என்றார்.

'பிறை மதி'யும் இறைவனின் அறக்கருணையைப் புலப்படுத்துகிறது. தக்கனால் சாபம் பெற்ற சந்திரன், இறைவனின் பெருங்கருணையால் விமோசனம் பெற்று, இறைவனால் சென்னியில் சூடிக் கொள்ளப்படும் பேறும் பெற்றான்.

இறைவனது சென்னியில் இருப்பது வளைந்த, பிறைச் சந்திரன். பொதுவாக, இறை மூர்த்தங்களின் சிரத்தில் பிறைச் சந்திரன் ஒளிர்வது ஞானத்தின் குறியீடாகக் கொள்ளப்படுகின்றது.. இறைவனின் திருவடிவங்களில், 'சந்திரசேகர மூர்த்த'மும் ஒன்று. சந்திரசேகர மூர்த்தம், போக மூர்த்தங்களுள் ஒன்றாயினும், யோகியருக்கு யோகமும் போகியருக்கு போகமும் அருளும் பெம்மான் அவன்.

( பிள்ளைப் பிறையும் புனலும் சூடும் பெம்மான் என்று
உள்ளத்து உள்ளித் தொழுவார் தங்கள் உறுநோய்கள்
தள்ளிப்போக அருளுந் தலைவன் ஊர்போலும்
வெள்ளைச் சுரிசங்கு உலவித் திரியும் வெண்காடே. ( திருஞான சம்பந்தப் பெருமான்) )..

*'கூத்தன்' என்பது பெருமானது சிறப்பு வாய்ந்த திருநாமங்களுள் ஒன்று. இறைவன் ஆடும் அருட் கூத்தே இப்பிரபஞ்ச இயக்கம்.. தில்லையில் எம்பெருமான், இப்பிரபஞ்ச இயக்கத்தையே தன் திருக்கூத்தாக ஆடியருளுகிறான்...*

*(உம்பரில் கூத்தனை உத்தமக் கூத்தனை*
*செம்பொற் றிருமன்றுட் சேவகக் கூத்தனை*
*சம்பந்தக் கூத்தனைத் தற்பரக் கூத்தனை*
*இன்புறு நாடிஎன் அன்பில்வைத் தேனே (திருமந்திரம்) )*

*'ஞானத்தைக் குறிக்கும் பிறைமதியை, தலையில் சூடிய கூத்தன்' என்று குறிப்பதன் மூலம், 'தனு, கரண, புவன, போகங்களை படைத்து, இப்பிரபஞ்ச இயக்கத்தை இறைவன் நடத்துவது, உயிர்கள் தம் வினைகளைத் தீர்த்து, ஞானம் பெறுதலின் பொருட்டே' என்பதை வாதவூரார் குறிப்பாலுணர்த்துவதாகக் கொள்ளலாம்..*

*'கூத்தன் குணம்பரவிப் பூணார் வனமுலையீர் பொன்னூசல் ஆடாமோ.============ 'கூத்தனாகிய இறைவனது கருணை நிறைந்த குணத்தினைப் போற்றி, நாம் பொன்னூஞ்சல் ஆடுவோமாக..' என்று பெண்கள் பாடுவதாகக் கூறுகின்றார் வாதவூரார். இதனால், இறைவனது குணத்தைப் போற்றிப் பாடுதலின் அவசியமும் அதன் பயனும் உணர்த்தப்பட்டது..*

*இறைவனது அறக்கருணை, இப்பாடலில் வியந்து கூறப்பட்டது. அண்ணல், அறக்கருணை பாலித்து, நம்மையும் ஆட்கொண்டருள வேண்டுவோம்!*

*மாணிக்கவாசகப் பெருமான் மலரடிகள் போற்றி!.*

**பாடல்**: *6*

*மாதாடு பாகத்தன் உத்தர கோசமங்கைத்*
*தாதாடு கொன்றைச் சடையான் அடியாருள்*
*கோதாட்டி நாயேனை ஆட்கொண்டென் தொல்பிறவித்*
*தீதோடா வண்ணந் திகழப் பிறப்பறுப்பான்*
*காதாடு குண்டலங்கள் பாடிக் கசிந்தன்பால்*
*போதாடு பூண்முலையீர் பொன்னூச லாடாமோ.*

**பொருள்:**

*"தாமரை மொட்டு போன்ற, அணிமணிகளை அணிந்த தனங்களையுடைய பெண்களே!...உமாதேவியாரை, தன் உடலின் ஒரு பாகமாகக் கொண்டருளியவனும், திருவுத்தரகோசமங்கையில் உள்ள, மகரந்தங்களையுடைய கொன்றை மாலையை அணிந்த சடாமுடியை உடையவனும், நாய்க்கு ஒப்பான எம்மை, அடியாருள் ஒருவனாக வைத்து சீராட்டி, ஆட்கொண்டு, தீயினை ஒத்த எம் முன்வினை, எம்மை மேலெழுந்து பற்றாதபடி, யாம் ஞானத்தோடு விளங்க, பிறவித்தளையை அறுப்பானுமாகிய இறைவனது திருச்செவிகளில் ஆடும் குண்டலங்களைப் பாடி, அன்பால் கசிந்து உருகி, நாம் பொன்னூஞ்சல் ஆடுவோமாக"*

**சற்றே விரிவாக:**

*இந்தப் பாடலில், மகேசுவர மூர்த்தங்களில் ஒன்றான 'அர்த்தநாரீஸ்வர' மூர்த்தம் போற்றப்படுகின்றது.. மாதொரு பாகனை,*

*பாகம் பெண்ணுருவானாய் போற்றி (போற்றித் திருவகவல்)*

*எனவும்,*

*தோலும் துகிலுங்*
*குழையும் சுருள்தோடும்*
*பால்வெள்ளை நீறும்*
*பசுஞ்சாந்தும் பைங்கிளியும்*
*சூலமும் தொக்க*
*வளையு முடைத்தொன்மைக்*
*கோலமே நோக்கிக்*

குளிர்ந்தூதாய் கோத்தும்பீ. (திருக்கோத்தும்பி) எனவும்,

பல பாடல்களில் புகழ்ந்து போற்றுகின்றார் வாதவூரார்.

இறைவனது அறக்கருணையினாலேயே உயிருக்கு 'அருட்சுத்தி' உண்டாகிறது.. இறைவனின் கருணையின் வடிவே சக்தி என்பார் பெரியோர். அம்மையும் அப்பனும் ஒன்றாக இணைந்து காணும் அர்த்தநாரீஸ்வர வடிவம், சக்தியோடு இணைந்து, ஐயன் நடத்தும் உலக இயக்கத்தையும், சக்தியும் சிவமும் ஒன்றே என்னும் உண்மையையும் உலகுக்கு உணர்த்துகிறது. அம்மையப்பனின் அறக்கருணையைப் போற்ற, 'மாதாடு பாகத்தன்' என்றார்.

கொன்றை, இறைவனுக்கு மிகவும் உகந்த மலர். ஆனாய நாயனார், கொன்றை மரத்தை, எம்பிரானாகவே எண்ணி, உருகி, குழலிசைத்து, சிவலோகம் சேர்ந்தவர். கொன்றை மலர் மாலையை சடைமீது சூடியவன் எம்பிரான்.. 'தாதாடு கொன்றை' என்பது 'மகரந்தங்கள் நிறைந்திருக்கும் கொன்றை' எனப் பொருள்படும்.

ஞானசம்பந்தப் பெருமான், கொன்றை மலரை திருமலர் என்றே போற்றுகின்றார். காஞ்சிபுரத்திலுள்ள ஆலஞ்சேரியில் திருமலர் உடையார் எனும் பெயரில் ஈசன் கோயில் கொண்டுள்ளார்.

திருமலர்க்கொன்றையான் நின்றியூர் மேயான்
தேவர்கள் தலைமகன் திருக்கழிப்பாலை
நிருமலன் எனதுஉரை தனதுஉரை யாக
நீறுஅணிந்து ஏறுஉகந்து ஏறிய நிமலன்
கருமலர்க் கமழ்சுனை நீண்மலர்க்குவளை
கதிர்முலை இளையவர் மதிமுகத்து உலவும்
இருமலர்த் தண்பொய்கை இலம்பையங் கோட்டூர்
இருக்கையாப் பேணிஎன்னெழில்கொள்வது இயல்பே.(ஞான சம்பந்தப் பெருமான்).

உத்தர கோசமங்கைத்
தாதாடு கொன்றைச் சடையான் அடியாருள்
கோதாட்டி நாயேனை
ஆட்கொண்டென்.....திருவுத்தரகோசமங்கையிலுள்ள, மகரந்தங்கள் நிறைந்த கொன்றை மாலையை சடைமுடியில் சூடிய எம்பிரான், நாய்க்குச்

*சமமான தன்னை, அடியவர்களுள் ஒருவனாக இருத்தி சீராட்டிய பான்மையை புகழ்ந்துரைக்கிறார் வாதவூரார்.*

*இங்கு மட்டுமல்லாது பல்வேறு பாடல்களில், தம்மை 'நாயேன்' என்றோ, 'நாயடியேன்' என்றோ வாதவூரார் பெருமான் குறிப்பிடுவதைக் காணலாம்..இதன் காரணம், தம்மை எளிமைப்படுத்திக் கொண்டு, இறைவனையும் அடியார்களையும் உயர்த்திப் போற்றுவதற்காக அன்றி வேறில்லை.. அனைத்துயிரினுள்ளும் உறைவது இறைவனே என்றுணர்ந்தவர் வாதவூரார்.. தாமே புல் முதலான பல்வேறு உயிரினங்களாகப் பிறவி எடுத்ததாக (புல்லாகி, பூடாய், புழுவாய் மரம் ஆகி....) சிவபுராணத்தில் உரைக்கிறார்.*

*இவ்வாறு தம்மை ஆட்கொண்ட எம்பிரான், 'தம் தொல் பிறவித் தீது ஓடா வண்ணம், திகழப் பிறப்பறுத்தான்' என்றார்.*

*பிறவித் தீது என்றது 'ஆகாமிய வினையை'. கன்மம்(வினை) சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என்னும் மூன்று நிலைப்பாடுகளை உடையது..இப்பிறப்பில் வந்து பயன் கொடுக்கும் வினைகள் பிராரத்தம் எனவும், அவற்றை நுகரும்போது அதாவது அனுபவிக்கும் போது செய்யும் புது வினைகள் ஆகாமியம் எனவும் சொல்லப்படும்..பிராரத்த வினையைத் தொடர்ந்து ஆகாமிய வினை வருதலால், வினையானது தொடர்ச்சியாய் இடையூறின்றிச் செல்கிறது.*

*இறைவன் கருணையால், திருவடி ஞானம்/திருவருள், உயிரினுள் திகழும் போது, இவ்வினைத் தொடர், மேலும் மேலும் கிளைக்காதொழியும்.*

*இது எவ்வாறு நடைபெறுகின்றதென்றால், திருவடி ஞானம் பெற்ற ஒருவர், தம்மையும், பாசங்களின் இயல்பையும் உள்ளவாறு உணர்ந்து, தாம் செய்வனவெல்லாம், இறைவன் செயலே என்ற நினைவோடு செய்து, அவனது அருள்வழியில் நடக்கிறார். ஆதலால், அவர் எந்த உடம்பில் நின்று எந்த வினையைச் செய்தாலும் அவை ஆகாமியம் ஆவதில்லை..*

*( நாம் அல்ல இந்திரியம் நம்வழியின் அல்ல, வழி*
*நாம் அல்ல நாமும் அரனுடைமை -- ஆம் என்னில்*
*எத்தனுவில் நின்றும் இறைபணியார்க்கு இல்லைவினை*
*முற்செய்வினையும் தருவான் முன் (சிவஞான போதம்) ).*

*இவ்விதம், இறைவன், திருவடி ஞானம் அருளி, பிறவித் தளையை அறுத்தான். அத்தகைய சிறப்பு வாய்ந்தவனது திருச்செவிகளில் திகழும் குண்டலங்களை, அன்பால் கசிந்து உருகிப் பாடி, நாம் பொன்னூஞ்சல் ஆடுவோம் என்கிறார் வாதவூரார்..*

*இறைவன், 'அன்பெனும் பிடியுள் அகப்படும் மலை'. ஆகவே, இறைவனைப் போற்றிப் பாடும் போது, அன்பால் கசிந்துருகிப் பாடவேண்டுவது கூறப்பட்டது. காதணி, இறைவனுக்கும், ஆசிரியர்களுக்கும் சிறப்பான அணிகலனாக கருதப்படுவது மரபு. அதையொட்டி, 'இறைவனது காதில் ஆடும் குண்டலங்களைப் பாடுக' என்றார்.*

*'தோடுடைய செவியன்' என்று ஆளுடையபிள்ளையாரும் இவ்விதம் இறைவனைப் போற்றுவதை, நாம் இங்கு தியானிக்கலாம்.*

*இறைவனது ஊரையும், கோயிலையும் பாடுவதைப் போல், இறைவனது அணிகலன்களைப் பாடுவதும் சிறப்புடையதென்பது இதனால் உணர்த்தப்பட்டது..*

*மாணிக்கவாசகப் பெருமான் மலரடிகள் போற்றி!*

*பாடல்: 7*

*உன்னற் கரியதிரு உத்தர கோசமங்கை*
*மன்னிப் பொலிந்திருந்த மாமறையோன் தன்புகழே*
*பன்னிப் பணிந்திறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்*
*அன்னத்தின் மேலேறி ஆடும்அணி மயில்போல்*
*என்னத்தன் என்னையும்ஆட் கொண்டான் எழில்பாடிப்*
*பொன்னொத்த பூண்முலையீர் பொன்னூச லாடாமோ.*

**பொருள்:**

*"அணிகளை அணிந்த பொன்னை நிகர்த்த தனங்களையுடைய பெண்களே! ..நினைத்தற்கரிய, திருவுத்தரகோசமங்கைத் திருத்தலத்தில் நிலையாக, பொலிவுடன் எழுந்தருளியிருக்கும் பெருமையுள்ள வேதியனும், தன் புகழை பலகாலும் சொல்லி, பணிந்து வணங்குபவரின் பாவங்களையும் பற்றையும் அறுப்பவனும், என் அப்பனும், என்னை ஆட்கொண்டவனுமாகிய சிவபிரானின் எழிலினைப் பாடி, அன்னத்தை ஒத்த ஊஞ்சலின் மேல் அழகான மயில் போன்று நாம் பொன்னூஞ்சல் ஆடுவோமாக" .*

**சற்றே விரிவாக:**

*இறைவன் நினைத்தற்கு அரியவன்.. 'உன்னற்கரியான் ஒருவன் இருஞ்சீரான்' என்று திருவெம்பாவையிலும் இதனை எடுத்துரைக்கிறார் வாதவூரார். வினைப்பயனின் காரணமாக, பல்வேறு எண்ணங்களில் கிடந்துழலும் நம் மனத்தால் இறைவனை நினைப்பது, இயலுமோ?!... அவன் அருளாலே அல்லவோ அவன் தாள் பணிதல் கிட்டும்?. அவ்வாறு நமக்கு அருள் செய்ய வல்ல பிரான் திருவுத்தரகோசமங்கையுள் நிலைபெற்று விளங்குகின்றான்..*

*இதை, 'உன்னற்கரிய திருவுத்தரகோசமங்கை' என்று, திருவுத்தரகோசமங்கையின் சிறப்பை வியந்துரைப்பதாகவும் கொள்ளலாம்.*

*மறைகளை ஓதி உணர்ந்த குருவடிவில் தம்மை வந்து ஆட்கொண்டதால், இங்கு எம்பிரானை, 'மாமறையோன்' என்றார்.. நான்மறைகளால் துதிக்கப்படுபவன் எம்பிரான் ஆனதாலும், 'மாமறையோன்' என்று இறைவனைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.*

*(வேதபா ரகரின் மிக்கார் விளங்குபே ரவைமுன்
சென்று
நாதனா மறையோன் ‘சொல்லு நாவலூ ராரூ
ரன்றான்
காதலென் னடியா னென்னக் காட்டிய வோலை
கீறி
மூதறி வீர்முன் போந்தா னிதுமற்றென் முறைப்பா'
டென்றான்.(திருத்தொண்டர் புராணம்) ).*

*"பன்னிப் பணிந்திறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்
என்னத்தன் என்னையும்ஆட் கொண்டான் எழில்பாடி" என்று,* வாதவூராரின் இந்தப் பாடலில், மூன்றாம் அடியோடு, ஐந்தாம் அடியைச் சேர்த்துப் பொருள் கொள்ளுதல் வேண்டும்..

'இறைவன், தன்னைப் பலகாலும் துதித்து, தன் புகழைப் பாடி வணங்குவாரின் பாவங்களை நீக்கி, பற்றறுத்து அருளுபவன். அவனே எம் தந்தை, எம்மையும் ஒரு பொருளாக நயந்து வந்து ஆட்கொண்டருளினான்' என்று போற்றுகின்றார் வாதவூரார். இதனால், இறைவனைப் போற்றுவோரது பாசங்கள் நீங்கும் என்பது கூறப்பட்டது.

*( "சீர்மேவும் ஆரூர்ச் சிதம்பர நாதனெனும்
பேர்மேவு ஞானப் பிரகாசன் - தார்மேவு
சேவடிகள் போற்றித் திகழ்முத்தி நிச்சயமொன்*

*றாவ தென மொழிவேன் யான்' (முத்தி நிச்சயம், குருஞானசம்பந்தர்) ).*

*(பற்றி நின்ற பாவங்கள் பாற்ற வேண்டில்,
பரகதிக்குச் செல்வது ஒரு பரிசு வேண்டில்,
சுற்றி நின்ற சூழ் வினைகள் வீழ்க்க வேண்டில்,
சொல்லுகேன்; கேள்: நெஞ்சே, துஞ்சா வண்ணம்!
“உற்றவரும் உறு துணையும் நீயே” என்றும்,
“உன்னை அல்லால் ஒரு தெய்வம் உள்கேன்” என்றும்,
“புற்று அரவக் கச்சு ஆர்த்த புனிதா!” என்றும்,
“பொழில் ஆரூரா!” என்றே, போற்றா நில்லே!.(திருவாரூர் திருத்தாண்டகம், அப்பர் பெருமான்) ).*

*அவ்விதம் ஆட்கொண்ட இறைவனது எழிலைப் பாடுதல் இங்கு அறிவுறுத்தப்பட்டது.. இறைவனது அழகே நிலையான அழகு.. அழகென்று தோன்றும் மற்றவையெல்லாம் அழியக்கூடியன. ஆகவே, 'இறைவனது எழிலினைப் போற்றிப் பாடுக' என்று ஊஞ்சலாடும் பெண்கள் உரைப்பதாகக் கூறுகின்றார் வாதவூரார்.*

*ஊஞ்சல் மெல்ல அசையும் தன்மை உடையதால், அதற்கு அன்னம் உவமையாயிற்று, அதன் மேல் ஆடும் பெண்களின் அழகிய சாயலுக்கு மயில் உவமையாயிற்று. எனவே,*

*அன்னத்தின் மேலேறி ஆடும்அணி மயில்போல்*
*பொன்னொத்த பூண்முலையீர் பொன்னூச லாடாமோ (நான்கு மற்றும் ஆறாம் வரிகளை இணைத்துப் பொருள் கொள்ள வேண்டும்) என்றார்.*

*இதற்கு, 'வெள்விடையின்மேல், செந்நிறத்துடன், அம்பிகையோடு வரும் அத்தன்' என்று பொருள் கூறுவதும் உண்டு. அதாவது, 'மணி மயில் போல் என்னத்தன்' என்றும் பொருள் கொள்ளலாம். மணி என்பது மாணிக்கம் என்ற பொருளில் வந்து, இங்கு இறைவனைக் குறிக்கும். மயில் அம்பிகையைக் குறிக்கும்.*

*எம்பிரானின் எழில் பாடி, அருள் பெறுவோம்!*

*மாணிக்கவாசகப் பெருமான் மலரடிகள் போற்றி!*

*பாடல்: 8*

*கோல வரைக்குடுமி வந்து குவலயத்துச்*
*சால அமுதுண்டு தாழ்கடலில் மீதெழுந்து*
*ஞால மிகப்பரிமேற் கொண்டு நமையாண்டான்*
*சீலந் திகழுந்திரு வுத்தர கோசமங்கை*
*மாலுக் கரியானை வாயார நாம்பாடிப்*
*பூலித் தகங்குழைந்து பொன்னூசல் ஆடாமோ.*

***பொருள்:***

*இந்தப் பாடலில், 'ஞாலம் மிக' என்பதை முதலாவதாகக் கொண்டு பொருள் கொள்ள வேண்டும்..*

*'உலகம் உய்யும்படியாக, உயர்ந்த கயிலை மலைச் சிகரத்தினின்று, நிலவுலகில் இறங்கி வந்து, 'வந்தி' தந்த பிட்டினை, அமுதாக உண்டும், வலைஞனாக, கடலில் கட்டுமரத்தின் மீது ஏறி மீன் பிடித்தும், குதிரைகளின் மீதேறி பரிமேலழகனாக வந்தும் நமையாண்ட இறைவன், s நல்லொழுக்கம் விளங்குகின்ற திருவுத்தரகோசமங்கைத் தலத்தில் எழுந்தருளியுள்ளான். திருமாலும் காணுதற்கரியவனான அந்த எம்பிரானை, நாம் வாயாரப் பாடி, உடல் பூரித்து, பக்தி மேலீட்டால் மனங்குழைந்து பொன்னூஞ்சல் ஆடுவோம்!'*

***சற்றே விரிவாக**:*

*'கோல வரைக்குடுமி வந்து குவலயத்துச்*
*சால அமுதுண்டு .........................'*

*உயர்ந்த கயிலை மலை உச்சியிலிருந்து, நிலவுலகில் இறங்கி வந்து, வந்தியின் கூலியாளாய், அவள் தந்த பிட்டினை அமுதென உகந்து உண்ட இறைவனின் பெருங்கருணையை வியந்து போற்றுகிறார் வாதவூரார்......'குடுமி' என்பது உச்சி எனப் பொருள்படும் இங்கு.*

*இறைவனது இந்தத் திருவிளையாடலை,*

*திண்போர் விடையான் சிவபுரத்தார் போரேறு*
*மண்பால் மதுரையிற் பிட்டமுது செய்தருளித்*
*தண்டாலே பாண்டியன் தன்னைப் பணிகொண்ட*
*புண்பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ (திருப்பூவல்லி)*

என்றும் பாடியருளுகின்றார் வாதவூரார். *திருவிளையாடற் புராணம்,* இந்தத் திருவிளையாடலை, மிக அழகாக எடுத்தியம்புகிறது.

*பிட்டு இடுவேன் உனக்கு என்றாள் அதற்கு இசைந்து*
*பெரும் பசியால்*
*சுட்டிட நான் மிக மெலிந்தேன் சுவைப் பிட்டில் உதிர்ந்த*
*எலாம்*
*இட்டிடுவாய் அது முந்தத் தின்று நான் இளைப்பாறிக்*
*கட்டிடு வேன் நின்னுடைய கரை என்றார் கரை இல்லார்.*

*தெள்ளி அடு சிற்றுண்டி சிக்கடைந்த பொதி நீக்கி*
*அள்ளி எடுத்து அருந்தப்பா என்று இட்டாள் அரைக்கு*
*அசைத்த*
*புள்ளி உடைத் துகில் நீத்தார் புறத்தானை விரித்து ஏந்தி*
*ஒள்ளியது என்று அவன் அன்பும் உடன் கூட்டி அமுது*
*செய்வார்.*

'தாழ்கடலில் மீதெழுந்து'======== 'வலை வீசின படலம்' இங்கு உரைக்கப் பெற்றது.. சுறாவிடமிருந்து பரதவர் குலத்தைக் காக்கும் பொருட்டு, இறைவன், மீனவனாக வடிவம் தாங்கிய விளையாடலைப் புகழ்கிறார் வாதவூரார். இறைவனின் எளிவந்த தன்மை இங்கு புலப்படுத்தப்பட்டது.. இறைவன், வலைஞனாக வடிவு கொண்டது, *திருவிளையாடற்புராணத்தில்* பின்வருமாறு உரைக்கப்படுகின்றது.

*கருகிருள் முகந்தால் அன்ன கச்சினன் கச்சோடு ஆர்த்த*
*சுரிகையன் தோள்மேல் இட்ட துகிலின் குஞ்சி சூட்டும்*
*முருகு கொப்பளிக்கும் நெய்தல் கண்ணியன் மூத்த*
*வானோர்*
*இருவரும் மறையும் தேடி இளைப்ப ஓர் வலைஞன்*
*ஆனான்.*

"பரிமேற் கொண்டு நமையாண்டான்" ===== வாதவூராருக்காக, இறைவன் நரிகளைப் பரிகளாக்கிய திருவிளையாடல் இங்கு உரைக்கப்படுகின்றது..

இறைவன், அவ்விதம் செய்ததோடு அல்லாமல், வேதத்தையே ஒரு குதிரையாக்கி, அதன் மேல், 'பரிமேலழகனாய்', குதிரை வாணிகனாக ஆரோகணித்து வந்தான்.. அவ்வாறு வந்த அண்ணலின் அழகைக் கண்ட பெண்கள், கீழ்வருமாறு கூறி நெட்டுயிர்த்தனர்..

காமன் இவனே கொல் அறு கல் உழு கடப்பந்
தாமன் இவனே கொல் பொரு தாரகனை வென்றோன்
மாமன் இவனே கொல் மலை வன் சிறகு அரிந்த
நாமன் இவனே கொல் என நாரியர் அயிர்த்தார். (திருவிளையாடற் புராணம்).

'ஞால மிக'===== இதற்கு இருவிதமாகப் பொருள் உரைக்கின்றனர். 'உலகம் உய்யும்படியாக' என்பது ஒரு பொருள். 'அனைத்துலகங்களிலும் மண்ணுலகமே மேலானது' என்பது மற்றொரு பொருள். முக்தியடையும் பொருட்டு, தேவர்களும் மனிதப் பிறவியையே வேண்டுகிறார்கள்.. 'ஆகவே மண்ணுலகமே சிறந்தது. சிறந்த மண்ணுலகில், இறைவன், நம்பால் கருணை கொண்டு ஆட்கொண்டருளுகின்றான் என்கிறார் வாதவூரார்.

'சீலந் திகழுந்திரு வுத்தர கோசமங்கை
மாலுக் கரியானை வாயார நாம்பாடிப்
பூலித் தகங்குழைந்து பொன்னூசல் ஆடாமோ ' ======= இறைவன் திருமாலும் காணுதற்கு அரியவன்.. ஆயினும், நல்லொழுக்கம் விளங்குகின்ற திருவுத்தரகோசமங்கையுள், நம் பொருட்டு எழுந்தருளியிருக்கிறான். இவ்வாறு உரைப்பதன் மூலம், இறைவன், நல்லொழுக்கம் நிறைந்தவர் இருக்குமிடத்து இருக்கிறான் என்னும் உண்மையை தெளிவுபடுத்தினார்.

'மாலுக்கரியானை' என்றது, இறைவனின் காணுதற்கு அரிய தன்மையையும், இறைவன், உயர்வற உயர்ந்தவன் என்பதையும் எடுத்துரைக்க. இறைவன், கருணை மேலீட்டால், தன் உயர்ந்த தன்மையையும் விடுத்து, கூலியாளாகவும், வலைஞனாகவும், குதிரை வாணிகனாயும் அடியாருக்காக வந்தருளிய எளிமையைப் போற்றுகின்றார் மாணிக்கவாசகப் பெருமான்..

இங்கு 'பூரித்து' என்பது 'பூலித்து' எனத் திரிந்தது. இறைவனது கருணையை வாயாரப் போற்றிப் பாடி, இறைவனது பெருமையை எண்ணி உடல் பூரித்து, பக்தி மேலீட்டால் மனங்குழைந்திருக்க, இறைவனது அருள் கிட்டும்.. உயிர், அருட்சுத்தி அடையும்.. இதுவே இறைவனது திருவிளையாடல்களைப் போற்றிப் பாடுவதால் கிடைக்கும் பேறு!..

*அத்தகைய பெரும் பேறை அடையும் பொருட்டு, 'இறைவனது திருவிளையாடல்களைப் பாடி, நாம் பொன்னூஞ்சல் ஆடுவோமாக' என்று ஊஞ்சலாடும் மகளிர் பாடுவதாக உரைக்கிறார். நாமும் இறைவனது திருவிளையாடல்களைப் போற்றிப் பாடி அருள் பெறுவோம்!*

*மாணிக்கவாசகப் பெருமான் மலரடிகள் போற்றி!*

*பாடல்; 9*

*தெங்குலவு சோலைத் திருஉத்தர கோசமங்கை*
*தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி*
*எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமும் ஆட்கொள்வான்*
*பங்குலவு கோதையுந் தானும் பணிகொண்ட*
*கொங்குலவு கொன்றைச் சடையான் குணம்பரவிப்*
*பொங்குலவு பூண்முலையீர் பொன்னூச லாடாமோ.*

## *பொருள்:*

*"விளக்கம் பொருந்திய, ஆபரணங்களை அணிந்த தனங்களையுடைய பெண்களே!.. தென்னை மரங்கள் பரவியுள்ள திருவுத்தரகோசமங்கையில், தங்குதல் பொருந்திய, சோதி வடிவான, ஒப்பற்ற திருவுருவமுடைய இறைவன் வந்தருளி, எங்கள் பிறவியை அறுத்து, எம் போன்றவரையும் ஆட்கொள்ளும் பொருட்டு, திருமேனியின் ஒரு பாகத்தில் பொருந்திய மங்கையும் (உமாதேவியும்) தானுமாய்த் தோன்றி, எம் குற்றேவலைக் கொண்டருளினான். அவ்வாறு அருளிய, மணந்தங்கிய கொன்றை மாலையணிந்த சடையையுடையவனது குணத்தைப் புகழ்ந்து, நாம் பொன்னாலாகிய ஊஞ்சலில் ஏறி ஆடுவோம்."*

## *சற்றே விரிவாக:*

*தெங்கு= தென்னை மரம்.. இப்பாடலில் 'உலவு' என்ற சொல், அதனுடனான சொற்களைப் பொறுத்து, 'பொருந்திய' அல்லது 'நிறைந்த' என்னும் பொருள் தந்தது. முதல் வரியில், 'தெங்குலவு சோலை' என்பதில், உலவு என்பது, தென்னை மரங்கள் நிறைந்து பரவிய என்ற பொருள் தந்தது.*

*'தங்குலவு சோதித் தனியுருவம் '...*

*'தங்குலவு' என்பதற்கு 'தங்குதல் பொருந்திய' என்பது பொருள்.. 'சோதித் தனியுருவம்' என்றது அருவுருவான இலிங்க வடிவத்தை.. வாதவூரடிகள், திருவுத்தரகோசமங்கைத் திருத்தலத்திற்குச் சென்று, அங்கு குருநாதனாக தமக்கருள் செய்த இறைவனைக் காணாமல் வருந்தினார். அத்தலத்து இலிங்க மூர்த்தி முன் நின்று, ' நீத்தல் விண்ணப்பம்' என்னும் திருப்பதிகத்தால் இறைவனைத் துதிக்க, இறைவன் முன்போலவே*

*ஆசிரியத் திருமேனியுடன் எழுந்தருளி வந்து அருள் செய்தான். இதையே, ''வந்தருளி...' என்று குறித்தார்.*

*( ஏசினும் யான்உன்னை ஏத்தினும் என்பிழைக்*
*கேகுழைந்து*
*வேசறு வேனை விடுதிகண் டாய்செம்*
*பவளவெற்பின்*
*தேசுடை யாய்என்னை ஆளுடை யாய்சிற்*
*றுயிர்க்கிரங்கிக்*
*காய்சின ஆலமுண் டாய்அமு துண்ணக்*
*கடையவனே. (நீத்தல் விண்ணப்பம்) ).*

*தனக்கென்று ஓர் உருவமற்ற பரம்பொருள், தம் அடியார் பொருட்டு, உருவம் தாங்கி வந்து ஆட்கொண்டருளுகின்றது.. உருவமற்ற பரம்பொருளை, உயிர்களால் பற்ற முடியாது. உள்ளத்தால் நினைக்க, துதிக்க இயலாது. ஆகவே உயிர்கள் தன்னை உணர்ந்துய்ய வேண்டும் என்னும் கருணையினாலேயே இறைவன் உருவம் கொள்ளுகின்றான். இறைவனது உருவம், அவனது சக்தியினால் உண்டானது. நம் உருவம் போல், மாயையால் ஆன உருவம் அல்ல அது.*

*நிர்க்குண பரம்பொருள், சகுண நிலையில், அருவுருவமாகிய இலிங்கத் திருமேனியாகிறது.. அடியாருக்கு அருள் செய்வதற்காக, உருவு கொண்டு, மாதொரு பாகனாகவும், பிறை சூடிய பெம்மானாகவும் அருள் சுரக்கிறது. இவ்விதம் இறைவன், அடியார் பொருட்டு வந்தருளிச் செய்தலை, இப்பாடலில் குறித்தார் வாதவூரடிகள்.*

*'எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமும் ஆட்கொள்வான்' ==== 'ஆட்கொள்வான்' என்பதற்கு 'ஆட்கொள்ளும் பொருட்டு' என்பது பொருள்.*

*தம் பிறப்பறுத்து ஆட்கொள்ளும் பொருட்டு, இறைவன் மாதொரு பாகனாகத் தோன்றி, தம்மை பணி கொண்டு அருளியமையை இங்கு உரைத்தார்.. இங்கு 'பணி கொண்ட' என்பது, வெளிப்படையாக, 'தம் குற்றேவலைக் கொண்ட' என்ற பொருள் தருகிறது. இதன் உட்பொருள் சற்று ஆழ்ந்து சிந்திக்கத் தக்கது.*

*இறைவனுக்கென்று தனியானதொரு பணியில்லை.. பிரபஞ்ச இயக்கத்தையே இறைவன் விளையாடலாகச் செய்தருளுகிறான். அவ்வாறிருக்க, அவன் 'இப்பணி தனது' என்று சொல்லி, அதைச் செய்யுமாறு, உயிர்களைக் குற்றேவல் கொள்ளுதல் எவ்வாறு?*

*உயிர்கள், இறைவனை முழுமையாகச் சார்ந்து, அவன் செயலே எல்லாம் எனத் தெளிந்து, 'இறைவன் விருப்பமே தன் விருப்பம்' என்று முழுமையாகத் தம்மை இறைவனிடம் ஒப்புக் கொடுத்தல் வேண்டும்.. அவ்விதமான பக்குவ நிலை, ஆழ்ந்த பக்தியின் மூலம் சித்திக்கும்.. அந்நிலை அடையும் போது, செய்யும் செயலெல்லாம் இறைவன் செயலென்று செய்யும் மனோநிலை வாய்க்கும்.. இறைவனது பணியாகக் கருதிக் கொண்டு எச்செயலும் செய்யும் போது, அன்பு மேலிடும். அருள் சுரக்கும்.. 'பார்க்குமிடந்தோறும் நீக்கமற நிறையும் பரிபூரணானந்தம் எம்பெருமான்' என்பது உணரப்படும்.. உயிருக்கு அருட்சுத்தி சித்திக்கும். அடியாருள் ஒருவராக இணைந்திருக்கும் நற்பேறு வாய்க்கும்... இறையடியாராக, எப்பணியும் இறைப்பணியே என்று உவந்து செய்யும் பரிபக்குவ நிலையடைதலே 'பணிகொள்ளு'தல்..*

*'நம் பொருட்டு, உருவம் தாங்கி வந்தருளும், மணம் தங்கும் கொன்றை மாலையை அணிந்த இறைவனது குணத்தைப் பாடிப் பரவி நாம் பொன்னூஞ்சல் ஆடுவோமாக' என்று ஊஞ்சலாடும் மகளிர் பாடுவதாக உரைக்கிறார் வாதவூரடிகள்.. இதன் மூலம், இறைவனது குணத்தைப் பாடுதல் வேண்டும் என்பது அறிவுறுத்தப்பட்டது..*

*'திருப்பொன்னூசலில்', இறைவன் திருவடி, கோயில் கொண்டருளும் ஊர், எழுந்தருளியிருக்கும் ஆலயம், இறைவன் புகழ், அணி, அழகு, குணம், இறைவன் திருவிளையாடல்கள் முதலியவற்றைப் புகழ்ந்து பாடுதல், 'அருட்சுத்தி'க்கு வித்தாகும் என்பது, ஒவ்வொரு பாடலிலும் ஒவ்வொன்றைக் குறித்துப் போற்றியமையால் புலனாகியது.*

*ஊஞ்சலாடும் மகளிர், இவ்வாறு பாடுவதாகக் குறித்தமையால், எச்செயல் செய்யினும் சித்தம் ஈசனிடம் இருக்க, அச்செயல் புரிதல் வேண்டும் என்பதும் புலனாகியது.. பொற்பலகையை மாட்டி ஆடும் ஊஞ்சலே 'பொன்னூசல்'. பொன்னம்பலமுடையான் திருவடியை பொழுதெல்லாம் சிந்தித்து, ஊஞ்சலாடுவது போல் ஏற்ற இறக்கமுடைய இவ்வுலக வாழ்வை நடத்தினால், ஈசன் பேரருள் பெற்று பிறவிப் பிணி நீங்கலாம் என்பது உட்கருத்து..*

*'திருப்பொன்னூசலு'க்குப் பொருள் எழுதும் பெரும்பணியினை நன்முறையில் நிறைவேற்றியருளிய சொக்கேசன் திருவருளை எண்ணிப் பணிகிறேன். இதன் புகழெல்லாம் ஈசனொருவனுக்கே அர்ப்பணம்.. இதில், ஏதேனும் குறைகள் இருக்குமாயின், என் சிற்றறிவை, பெரியோர்கள் அருள்கூர்ந்து மன்னித்தருள வேண்டுகிறேன்.*

*இதை என் வலைப்பூவில் ( [www.aalosanai.blogspot.com](http://www.aalosanai.blogspot.com) ) எழுதும் போது, நல்ல பல கருத்துக்கள் சொல்லி, என்னை ஊக்கிய அன்பர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றி!*

*எம்பெருமான் திருவருளால், 'திருப்பொன்னூசல்' பொருளுரையைப் படித்த, படிக்கும், படிக்கப் போகும் அன்பர்கள் யாவரும் வேண்டுவன பெற்று வாழ்வாங்கு வாழவேண்டி, எம்பிரானைப் பிரார்த்திக்கிறேன்..*

*திருச்சிற்றம்பலம்!.*

*மாணிக்கவாசகப் பெருமான் மலரடிகள் போற்றி!*